SRI V. ARUNACHALA THEVAR : இந்தத் திட்டம் எந்த வருஷம் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது என்றும், எத்தனை ஆயிரம் ஏக்கர்களுக்குப் பயன்படும் என்றும், இதை கனம் அமைச்சர் அவர்கள் எப்போது பார்வையிட்டிருக்கிறார் என்றும், இருந்தும் ஏன் தாமதம் என்றும் கனம் அமைச்சர் அவர்கள் சொல்வாரா என்று கேட்கிறேன் ?

THE HON. SRI P. KAKKAN : இந்தத் திட்டம் ஏற்கெனவே பரிசீலனை செய்யப்பட்டிருக்கிறது. நானும், மதிப்புக்குரிய மின்சார இலாகா அமைச்சர் அவர்களும் பார்த்திருக்கிறோம். பரிசீலனையில் இருக்கிறது என்று தான் சொன்னேன். பரிசீலனை செய்து முடிவு எடுக்கப் படும்.

*Lignite at Neyveli (mining)*

* 1194 *Q.*—SRI M. KALYANASUNDARAM : } Will the
SRI N. R. THIAGARAJAN : }

Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) When the actual mining of lignite for consumption is expected to commence at Neyveli;

(*b*) the annual quantity of lignite expected to be mined; and

(*c*) the quantity that will be used for—

(1) thermal station; and

(2) steel plant?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) The actual excavation of the lignite will commence only by the end of September 1961.

(*b*) About 3.5 million tons of lignite will be mined when all the units of integrated project go into full production.

(*c*) (1) About 1.5 to 1.75 million tons.

(2) The actual requirements of lignite for the steel plant cannot as yet be accurately predicted.

SRI M. KALYANASUNDARAM : வேறு இன்னும் என்னென்ன காரியங்களுக்கு இந்த லிக்னைட்டை உபயோகப்படுத்தும் உத்தேசம் இருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : இன்டெக்ரேட்டெட் ப்ராஜெக்ட் இது. நான் சொன்னதற்கு மேல் பிரிக்கெட்டிங் அண்டு கார்பனைசிங்குக்கும் உபயோகப்படுத்துவதாக இருக்கிறது.

SRI A. A. RASHEED : Is it not a fact that the cost of mining has increased because of the delay in mining?

THE HON. SRI R. VENKATARAMAN : This Government has no information about that. It is a Corporation run by the Government of India.

SRI M. KALYANASUNDARAM : ப்ரிக்கெட்டிங் செய்து பொது மக்கள் உபயோகத்திற்கு எப்போது அளிக்கும் உத்தேசம் இருக்கிறது ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஒரு வாரத்திற்கு முன்பு தான் ப்ரிக்கெட்டிங் செய்யக் கூடிய ஒரு கான்ஸார்ட்டியம், நான்கு நாடுகளில் உள்ள கம்பெனிகளுடன் ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்கிறது. 1964-ல் ப்ரிக்கெட்டிங் செய்ய முடியும் என்று அன்று தெரிவிக்கப்பட்டது.

30th March 1961]

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, இந்த ப்ரிக்கெட்டிங் உற்பத்தி செய்வது1964-லேதான் முடியும் என்று கூறி வருவதால் நீண்ட கால தாமதம் ஏற்படுகிறது. அப்படி தாமதம் ஏற்படுவதால் பல்வேறு தொழில்கள் பாதிக்கப்படும் என்று அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அதை விரைவுபடுத்த ஏதாவது முயற்சி எடுக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ப்ரிக்கெட்டிங் பண்ணுவதில் கால தாமதம் ஆவது என்று சொன்னால் இதற்கு யந்திரங்கள் வேண்டும். இன்னும் டெண்டரே வரவில்லை. இந்த வித யந்திரங்கள் கிடைப்பது அவ்வளவு சுலபமல்ல. இந்த யந்திரங்கள் தயார் செய்து வரவேண்டும். இன்னொன்று இந்த ப்ரிக்கெட்டிங் செய்யாததால் எந்த விதத் தொழிலும் பாதிக்கப்படாது. அடுப்புக்கரிக்கு பதிலாக உபயோகப்படுத்துவது தான் ப்ரிக்கெட்டிங். இதனல் எந்தத் தொழிலும் எந்த விதத்திலும் பாதிக் கப்படாது.

SRI M. KALYANASUNDARAM : லிக்னைட்டிலிருந்து நேரடியாக காஸ் உற்பத்தி செய்து வீடுகளுக்கு அளிக்கும் உத்தேசம் உண்டா ;

THE HON. SRI R. VENKATARAMAN : இப்போது அந்த உத்தேசம் இல்லை.

SRI T. SAMPATH : What will be the quantity available for public after briquetting?

THE HON. SRI R. VENKATARAMAN : I am afraid I do not have the information.

SRI M. R. KANDASWAMY MUDALIYAR : ப்ரிக்கெட்டிங் ஆனது இப்போது அடுப்புக்கரி வாங்கிக்கொண்டு எரிப்பதைக் காட்டிலும் குறைந்த செலவு ஆகுமா ; அல்லது கூடுதலான செலவு ஆகுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : குறைந்த செலவு தான் ஆகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

SRI M. SELVARAJ : ஃபெர்ட்டிலைஸர் ப்ளாண்ட் எப்போது ஆரம்பிக்கப் படும் என்று திட்டவட்டமாகக் கூற முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : வேலைகள் ஆரம்பமாகி விட்டது. பூர்த்தி ஆவது அடுத்த 1963-ம் ஆண்டில் என்று இப்போது நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது.

SRI M. KALYANASUNDARAM : வருஷம் ஒன்றுக்கு 35 லட்சம் டன் உற்பத்தி ஆகும் என்று கனம் அமைச்சர் அவர்கள் கூறினார்கள். அதை அதிகரிக்கும் உத்தேசம் உண்டா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : நான் சொன்னேன் இப்போது 35 லட்சம் டன் இருக்கிறது என்று. நாம் இதை 60 லட்சமாக உயர்த்தவேண்டும் என்று மத்திய சர்க்காருக்கு எழுதியிருக் கிறோம். அதைப் பற்றி பரிசீலனையெல்லாம் நடந்துகொண்டிருக்கிறது.

SRI N. K. PALANISAMI : ஸார், லிக்னைட்டிலிருந்து கோல் காஸ் எடுப்பதற்கான பரிசீலனை செய்யப்பட்டதா ? அப்படியானால் சென்னை நகரத்தில் கொண்டு வருவதற்கு முயற்சி செய்யப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : It is like counting the chickens before they are hatched. பின்னாலே யோசனை பண்ணலாம்.